# தேசோபகாரி.

11. நோவேம்பர் மீ, 1894-ஹு.



GRANVILLE SHARP.

(*Champion of the Slaves.*)

## கிருன்வில் ஷார்ப் என்பவர்.

(அடிமைகளின் இரக்ஷை கர்த்தா.)

1765-ம்ஹு இங்கிலாந்திலே ஒரு துரைமகன் ஸ்திராங் என்னும் பெயருள்ள தன் ஆப்பிரிக்க அடிமையை மிகவும் குரூரமாய் அடித்து உதைத்ததினால், அவ்வடிமை பிணியுற்று வருந்திச் சாகப்போகும்போது, ஈன நெஞ்சனான அந்தத் துரை அவனை வீட்டைவிட்டுத் தெருவிலே துரத்திவிட்டான். அந்த ஏழை: "அகதிக்கு ஆகாயமே துணை" என்று அழுதுகொண்டு, உல்லியம் ஷார்ப் என்னும் நாமதேயமுடைய ஒரு டாக்ட்டர் துரையிடத்தில் போய் மருந்துக்காகவும் உதவிக்காகவும் மன்றாடினான். அம்மகானுடைய சகோதரனாகிய கிருன்வில் ஷார்ப் என்னும் சற்குணசாலி அவ்வேழையைக் கண்டு மனமுருகி, நல்ல சமாரியனுக்குச் சமானமாய் அவனுக்குச் செலவுக்குப் பொருளும்

ஈந்து, தமது சகோதரனிடத்தில் பேசி அவனேச் சீக்கிரத்தில் சுகப்படுத்தி, அவனுக்கு ஒரு வேலேயும் சம்பாதித்துக் கொடுத்தார். அவன் இவ்வேலேயில் இரண்டு வருஷமிருந்து, நன்றாய்ச் சரீரம் தேறி, முன்னேவிட அதிக புஷ்டியும் பெலமுமாய் இருப்பதைக் கண்ட அவனுடைய பழைய எஜமான், ஒரு நாள் அவனேத் தெருவிலே வைத்துப் பிடித்துக் கட்டி 30 பவுனுக்கு விலேசெய்து; அமெரிக்காவைச் சேர்ந்த மேலிந்தியாவுக்குக் கப்பலேற்றும்படி காவலில் வைத்திருந்தான். இவ்விஷயம் கிருன்வில் ஷார்ப் என்பவருடைய செவிக்கெட்டினபோது, அவர் கன்றைப் பறிகொடுத்த பசுவைப் போல மனங் கன்றி, அதிவேகமாய் லாட் மேயோ என்னும் லண்டன் நகராதிபதியிடம் சென்று முறையிட, அவர்: சற்கார் வாறண்டில்லாமல் ஒருவரையொருவர் பிடிக்கப்படாது என்ற விதிப்படி ஸ்திராங் என்பவனே விட்டுவிட வேண்டுமென்று விதித்தார். அதின்படி அவ்வடிமை விடுதலேயடைந்து, சீற்றரவின் வாய்க்குத் தப்பின தேரைபோல சந்தோஷத்தோடு போகும்போது, மேற்சொன்ன கப்பலின் மாலுமி மேயோ பிரபுவின் முன் வைத்து: இவ்வடிமை எனக்குரியவன்; நான் அவனேப் பிடிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு பலவந்தமாய்ப் பிடித்தான். அப்போது ஷார்ப் என்பவர் அவனே நோக்கி: "இதோ, நீ யோனத்தான் ஸ்திராங் என்பவனே எதிர்த்துப் பலபந்தப்படுத்துகிறாய் என்று மகாராஜாவின் நாமத்திலே உன்மேல் குற்றம்பாரிக்கிறேன்; இதற்கு இங்கிருப்பவர் யாவரும் சாட்சிகள்" என்று சத்தமாய்க் கூற, மாலுமி பயந்து அடிமையை விட்டுவிட்டுப் போய்விட்டான்.

இவ்வாறு அங்கிலேய துரைமகன் ஒருவர் அடிமையின் இரட்சைகர்த்தாவாகப் பகிரங்கமாய் வெளிப்பட்டது அப்போதுதான். அதுமுதல் அம்மகானுபாவர் அடிமை ஆட்சியையும் அடிமை வியாபாரத்தையும் அடியோடு தொலேக்க வேண்டுமென்று தீர்மானித்து, அதற்கென்றே தம்மை முழுதும் தத்தம்பண்ணி, நியாயசாஸ்திரத்தை நன்றாய்ப் பாராயணஞ் செய்து, "இங்கிலாந்தில் அடிமையாட்சிக்கு இடங்கொடுப்பதின் அநீதி" என்ற பெயர்கொண்ட ஒரு நூல் எழுதிப் பிரசுரஞ்செய்தார்.

இதுந்தவிர காவற்கூடங்களிலும், துறைமுகங்களிலும், எளியவர் இல்லிடங்களிலும் சென்று அடிமைகளே விடுதலே பண்ணுவித்தார். கடைசியில் சாமர்ஸெற் என்னும் ஒரு நீகிரோவ ஆடிமைக்காக அவர் பண்ணின முயற்சி அடிமைகளுக்கு அனுகூலமான ஒரு சட்டம் பிறப்பதற்கு ஏதுவாய்



முடிந்தது. அதெப்படியெனில்: மேற்படி சாமர்ஸெற் என்னும் அடிமை ஒளித்தோடும்போது, அவன் எஜமான் அவனேப் பிடித்துத் தயைதாட்சண்யமின்றி அடித்து, ஜமேய்க்காவில் விற்றுவிடும்படி ஒரு கப்பலில் ஏற்றினன். ஷார்ப் என்பவர் அதை அறிந்து, அதைப் பற்றிக் கோட்டிலே பிரியாது செய்து, தமக்கு அனுகூலமான தீர்ப்புப் பிறப்பித்தார். கடைசியில் அந்தத் தீர்ப்பைக் கவர்ன்மென்ருர் ஒரு சட்டமாக்கலாமா என்று யோசித்து, 1772-ம் ஸு மேய் மீ "அடிமையானவன் அங்கிலேய அதிர்த்திக்குள் அடி வைத்தவுடன் சுயாதீனனுகிருன்" என்ற பேர்போன சட்டத்தை ஏற்படுத்தினர்கள். இதினல் ஷார்ப் என்பவருக்குண்டான சந்தோஷம் இம்மட்டென்றில்லே. அவருக்குக் கிடைத்த இந்தப் பெரிய காரியசித்தி அடிமைகள் மேலுள்ள அவரது கரிசனேயை அதிகப்படுத்தினது. அடிமை வியாபாரத்தைச் சமூலம் அழித்துவிடவேண்டும் என்ற ஆசையோடு 1783-ம் ஸு அடிமை ஆட்சிக்கு விரோதமான முதலாம் கமிற்றியை ஏற்படுத்தினர். அந்தக் கமிற்றியில் அடிமையாட்சியைப் பிராணப் பகையாய்ப் பகைத்த பெரியோர் சிலர் இருந்தார்கள்.

ஷார்ப் என்பவர் வயோதிபனய்ப் பழுத்த பழமாகும் வரையும் பிழைத்திருந்தார். அவர் மரித்துக் கண்மூடுமுன், இங்கிலாந்தில் அடிமை வாணிபம் அடியோடே நாசமாவதைக் கண்டு களிகூரும் பாக்கியம் அவருக்குக் கிடைத்தது.

இந்தப் பரோபகாரியின் சிந்தை அடிமைகளின் விஷயத்தில் மட்டுமல்ல, இன்னும் பல நல்முயற்சிகளிலும் சென்று பெரும் நன்மை செய்தது. பிரித்தானிய பரதேச வேதாகம சங்கம் உற்பத்தியானபோது, அவர் அதின் பேருபகாரியாய் விளங்கினதுமன்றி, அதின் பொதுவான முதற் கூட்டத்தில் அவரே அக்கிராசனபதியாயுமிருந்தார். இந்தச் சங்கத்திற்குப் பெருந்தொகையான பொருள் அளித்து, அரபிக், காப்திக், கா்திக், சீரிய, மலேய, அர்மீனிய பாஷைகளில் திருப்பப்பட்டிருந்த மொழிபெயர்ப்புகளே மகா முயற்சியோடு சேகரித்துக் கொடுத்தார்.

அவரது வருமானம் முதலாவது குறைவாய் இருந்த போதிலும், பிற்பாடு அவருடைய பெந்துக்களின் மரணத்தின் மூலமாய் பொருள் அதிகரித்தது. அவர் லண்டன் புரியில் வாசம்பண்ணி, 1813-ம் ஸு தமது 78-ம் வயசில் பரலோகபிராப்தியானர். அவரது நாமத்திற்கு ஞாபகமாகவும் மகிமையாகவும் அரசர் பிரபுக்கள் ஆதியானவர்களே சேமிக்கிற உவெஸ்ற்மினிஸ்ற்றர்ஆபி என்னும் ஆலயத்தில் ஒரு ஞாபகஸ்தம்பம் எழுப்பப்பட்டிருக்கிறது.

## இரக்கக் குறிகள்.

"ஆயிரத்தில் ஒருவராகிய சமாசிபண்ணுகிற தூதனானவர் மனுஷனுக்குத் தம்முடைய நிதானத்தை அறிவிக்கும்படிக்கு அவனுக்கு அனுசாரியாயிருந்தாரேயாகில், அவர் அவனுக்கு இரங்கி, அவன் படுகுழியில் இறங்காதபடிக்கு: நீர் அவனை இரட்சியும்; மீட்கும் பொருளை நான் கண்டுபிடித்தேன் என்பார்." யோபு 33: 23, 24.

தேவனுக்கு ஒருவனிடத்தில் இரக்கம் இருக்கும்போது, அவனை இரட்சிக்கும்படி அவர் துன்ப துக்கங்களின் மூலமாய் அவன் உள்ளத்தில் தமது திருவேலையை ஆரம்பிக்கிறார். எலிகூ என்பவன் பிணியின் மூலமாய்த் தேவன் இந்தக் கிரியையைத் துவக்குவதாகச் சொல்லுகிறான். பிணியின் மூலமாய் மாத்திரமல்ல, கடுங்காற்று, பூமியதிர்ச்சி, அக்கினி உபாதை, ஜலப்பிரவாகம், மழைத்தாழ்ச்சி, பஞ்சம், தரித்திரம், மரணம் முதலிய பல துன்பங்களினால் தேவன் மனுஷனை உணர்த்திக் கிருபைக்குள் கொண்டுவந்து இரட்சிப்பதுமுண்டு. இந்தச் சாதனங்கள் இல்லாமல் பரிசுத்த ஆவியானவர்தாமே உள்ளங்களை உடைத்து, அவைகளை நரகபாதாளம்வரையும் தாழ்த்தித், திரும்பவும் உயர்த்திச், சிலுவையண்டை கொண்டுபோய், இரட்சித்து வருகிறார் என்பதும் நமக்குத் தெரிந்ததுதான். இதை வாசிக்கிற சிநேகிதனே, உன்னையும் தேவன் தமது கிருபையின் ஆளுகைக்குள் கொண்டுவரும்படி இரக்கமாய் உன்னை ஆயத்தம் பண்ணிவருகிறார் என்று நம்புகிறோம். உனக்கு இந்தப் பிரசங்கத்தினால் அதிகமான ஆசீர்வாதம் உண்டாகும்; இதை நீ கவனத்தோடும் ஜெபத்தோடும் வாசிப்பாயாக.

தேவன் ஒருவனைத் தமது கிருபைப் பிரமாணத்திற்குள் கொண்டுவரத் திருச்சித்தங்கொள்ளும்போது, அவர் பல வழிகளினால் அவனை இரட்சித்து ஆசீர்வதிக்கிறார். அவ்வழிகளில் சிலவற்றை இங்கே விபரிப்போம்.

I. **அவர் அவனிடத்தில் தமது தூதனை அனுப்புகிறார்.** இந்த வாக்கியத்திலே சொல்லப்பட்டிருக்கிற "தூதனானவர்" என்பது போதகன்மாரைக் குறிக்கலாம். போதகன்மார் பரிசுத்த ஆவியின் மூலமாய் மனுஷருடைய ஆத்துமாவுக்குத் தேவனுடைய திருச்சித்தத்தைப் போதப்படுத்துகிறவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் இவர் "ஆயிரத்திலொருவர்" என்று சொல்லப்படத்தக்கவர்களாயிருக்கவேண்டும்; நல்ல அறிவுடையவர்களாயிருக்கவேண்டும்; சிறந்த சன்மார்க்கரும் திவ்ய சுபாவிகளுமாயிருக்கவேண்டும்; சுருக்கிச் சொன்னால் அவர்கள் ஆயிரக்கணக்கான மனுஷருக்குள்ளிருந்து தெரிந்துகொள்ளப்பட்ட சிறப்புப் பொருந்தினவர்களாயிருக்க வேண்டும். இப்பேர்ப்பட்ட ஒரு போதகனைத் தேவன் ஒருவனிடத்திற்கு அனுப்பும்போது, அவர் அவன்மேல் இரக்கமுடையவராயிருக்கிறார் என்பதற்கு அது அறிகுறியாயிருக்கிறது.



அநேக வியாக்கியானிகள்: "தூதனானவர்" என்பது இயேசு கிறிஸ்துவைக் குறிக்கும் என்கிறார்கள். அதும் சரியான வியார்த்திதான். இந்த வாக்கியங்களில் இரக்ஷண்யநாதருக்கு "ஆயிரத்திலொருவர்" "சாமாசுபண்ணுகிறவர்" என்கிற நாமங்களும் சூட்டியிருக்கிறது. இந்நாமங்கள் அவருக்கு மிகவும் ஏற்றவைகள் என்பதற்கு ஐயமில்லை. அவர் "ஆயிரத்திலொருவர்." ஓ, இணையற்ற யேசுவே, தாய் வயிற்றில் பிறந்த சகல மனுஷருக்குள்ளும் உமக்கு சமமானவர்கள் ஆர்! எலிகூ என்பவன் அவரை "ஆயிரத்திலொருவர்" என்பது துல்லிபமான ஒரு தொகையைக் குறியாமல், கணக்கற்ற பெருந் தொகையைக் குறிக்கும். அகிலாண்டம் முழுதிலும் அவருக்கு ஒப்பானவர்களைக் காண்பது அரிது. அவரை நம்புகிறவர்களுக்கு அவருடைய சிறப்பு கரும்பைக் கொண்டையிலிருந்து தின்பதுபோல வரவர மிகவும் அதிகமதிகமாய் விளங்கும். அவர்கள் முதலாவது அவர் ருசியுள்ளவரென்று எண்ணுகிறார்கள்; பிற்பாடு அவர் இனிமையானவர் என்று அறிகிறார்கள்; பிறகு அவர் இன்பத்திலும் இன்பமானவர் என்றும், அன்பிலும் பூரண அன்பானவர் என்றும், அழகிலும் அதிக அழகானவரென்றும், ஒப்புவமையற்ற உன்னத பொருளென்றும் அறிந்துகொள்கிறார்கள். அவரே மோக்ஷத்திற்கு வாசல்; மோக்ஷத்தின் வாசல் என்று சொல்லிக்கொள்ளுகிற மற்றத் தேவர்களெல்லாம் மோக்ஷத்தினின்று நம்மை விலக்குகிற தடுப்புச் சுவர்களாயிருக்கிறார்கள். அவர் ஆத்துமாவின் ஒளி; ஒளி என்று சொல்லிக்கொள்ளுகிற மற்றத் தேவர்களெல்லாம் ஆத்துமாவுக்கு இருட்டாயிருக்கிறார்கள். அவர் சர்வ தேவர்களிலும் மேலான தேவன்; சேராபீன்களும் கேருபீன்களும், தேவதூதர்களும், அப்போஸ்தலரும், இரத்தசாக்ஷிகளும், சகல பரிசுத்தவான்களும் பரிசுத்தர் பரிசுத்தர் என்று போற்றுகிற பரம இரக்ஷகர். ஓ, பாவியே, நீ அவரை ஏற்றுக்கொள். உன் ஆத்துமாவை இரக்ஷித்துத் சிறப்பித்து ஆசீர்வதிக்கும்படி தேவன் அவரை உன்னிடத்திற்கு அனுப்பியிருக்கிறார். இது தேவன் உன்னிடத்தில் இரக்கமுள்ளவர் என்பதற்கு எவ்வளவோ ஏற்ற அறிகுறியாயிருக்கிறது!

அந்தத் திவ்ய தூதனானவர் "சாமாசுபண்ணுகிறவராகவும்" இருக்கிறார். சாமாசுபண்ணுவதென்பதற்கு இவ்விடத்தில் கருத்து: ஒரு

பாஷையிலிருந்து இன்னொரு பாஷையில் மொழிபெயர்த்துச் சொல்வதைக் குறிக்கும். சாமாசுபண்ணுகிறவன் இரண்டு பாஷைகள் அறிந்திருக்கவேண்டும். இயேசுவானவர் தேவ பாஷையும் மனுஷ பாஷையுமாகிய இரு பாஷைகளும் நன்றாய் அறிந்தவர். தேவன் பேசுவது அவருக்குத் தெரியும்; அவர் பேசுவது தேவனுக்குத் தெரியும். தேவன் விரும்பத்தக்கவிதமாய்ப் பேச அவர் அறிந்திருந்தார். மனுஷருடைய பாடுகளும் வருத்தங்களும் அவருக்குத் தெரிந்திருந்தது. மனுஷ இருதயத்திலுள்ளதெல்லாம் அவருக்குத் தெரியும். அவைகளை அறிந்து தேவனிடத்திலே சொல்லுவார். இயேசுவானவர் தேவனைக்குறித்து மனுஷர் ஒருவரும் போதித்துக்கொள்ளக்கூடாததைப் போதிக்கக்கூடியவர்; மனுஷர் ஒருவரும் உணரக்கூடாததை உணரக்கூடியவர். ஆதலால் அவர் தேவனுக்கும் மனுஷனுக்கும் நடுவே சாமாசுபண்ணுகிறவராயிருப்பதற்குத் தகுதியுடையவர்தான். உன் துன்பங்களையும், கஷ்டங்களையும், உன் பாவபாரத்தையும், வருத்தத்தையும் அவரிடத்தில் சொல்; அவர் தேவனிடத்தில் சொல்லி உனக்குப் பாவமன்னிப்பையும், சந்தோஷத்தையும், சமாதானத்தையும் வாங்கித் தருவார்.

**II. தூதனானவர் மனுஷனுக்குத் தேவனுடைய நிதானத்தை அறிவிக்கிறார்.** நிதானம் என்பது நியாயம் அல்லது சத்தியத்தைக் குறிக்கும். யோபு என்ற பக்தனைப் பாடுக்குள்படுத்தின விஷயத்தில் தேவன் நிதானக்கேடு காண்பிக்கவில்லை என்பது இந்த வாக்கியத்தில் விளங்குகிறது. யோபு சகிக்கமுடியாத துன்பமடைந்து, பெரும் வேதனைப்பட்டுப், பிணியினால் எலும்பும் தோலுமாகி, மரணவாசலின் சமீபத்திலிருந்தான். இது தேவனுடைய நிதானக்கேட்டினால் அவனுக்குச் சம்பவியாமல், அவருடைய நீதியினால் உண்டானது. தேவன் தமது இரக்கத்தை ஒருவனுக்கு வெளிப்படுத்துமுன், சிலவேளைகளில் அவனை யோபைப்போல துன்பப்படுத்திப், பாதாளத்தின் வாசலிலே வைத்துக்கொண்டு அவனுக்குத் தமது கிருபையைக் காண்பிக்கிறார். அப்படிச் செய்தல்லாமல் அவரது கிருபை அவனுக்கு விளங்காது. துன்பத்திலே நீ சிலவேளைகளிலே: இதெல்லாம் எனக்கு விரோதமாய் நேரிடுகிறது; எவ்வளவு காலம் நான் பிணியினால் வருந்துகிறேன்; எவ்வளவு காலம் வேலையில்லாமல் வறுமைப்படுகிறேன்; என் அருமைப் பிள்ளைகள் எத்தனையோ இறந்துபோனது; என் மனைவி எத்தனை மாசமாய்க் கட்டில் கிடையாய்க் கிடக்கிறாள்; எத்தனை காலமாய்ப் பஞ்சமும் பசியும் என்னைக் கொல்லாமல் கொல்லுகிறது என்று துக்கித்து அழுகிறாய். ஆனால் சாமாசுபண்ணுகிற தூதனானவர் உன்னிடத்திற்கு வரும்போது, அவர் தேவன் உன்னை இப்படி வருத்தப்படுத்துவது அன்பினாலன்றிக் கோபத்தினாலல்ல என்று போதப்படுத்தி, உன்னிலிருக்கிற சகல அழுக்குகளையும் துடைத்து உன்னைத் தமது பிள்ளையாகப் பக்குவப்படுத்தும்படி தண்டிக்கிறார் என்று விளக்கிக் காண்பிப்பார். உன் மனசுக்குள்ளே இந்தப் போதம் உண்டாகும்போது, நீ உணர்வடைந்து: ஆ, தேவனே இந்தத் துன்பத்தில் நீர் என்னைப் பக்ஷித்துவிடாதது உமது இரக்கம்; நீர் என்னை அடித்தும் என்னிடத்தில் அன்பாயிருக்கிறீர். நான் நரகத்திற்கு விரைந்தோடும்போது நீர் இந்தத் துன்பமாகிய குழியை எனக்குமுன்னே வெட்டி வைத்தீர்; அதிலே விழுந்தது எனக்கு நன்மை; அதிலே விழாவிட்டால் அக்கினி நிறைந்த நரகக்குழியிலே விழவேண்டியதாகும். ஓ, நீர் நல்லவர்; நீர் நல்லவர்; நான் இந்த மோசமார்க்கத்தை விட்டுத் திரும்பி, இனி இரக்ஷண்ணிய மார்க்கத்தில் நடப்பேன் என்று சொல்லிச் சீரடைவாய். பாவவழியில் நடந்தும் மனச்சமாதானமாயிருக்கிற மனுஷனைப்போல மோசமானவன் ஒருவனுமில்லை. ஆதலால் பாவியானவன் தன்னை உணரும்படி அவனுக்குப் பலவிதமான துன்பங்கள் உண்டாவது நல்லதுதான். இதை வாசிக்கிற சிநேகிதனே, உனக்கு வறுமையும் வருத்தமும் துன்பமும் தொல்லையுமிருக்கிறதானால், நீ இயேசுகிறிஸ்துவானவரை நோக்கிப் பார்; அவர் இந்தத் துன்பத்தின் தாற்பரியத்தை உனக்கு விளக்கிக் காண்பித்து, இதின் மூலமாய் உன்னை ஆசீர்வதிப்பார்.

**III. பிறகு தேவன் அவனுக்கு இரங்குகிறார்.** கிறிஸ்துவானவர் தூதனாகவும் தேவனுடைய நிதானத்தை அறிவிக்கிறவராகவும் பாவியினிடத்தில் போகும்போது, பாவி தேவனுடைய நேர்மையையும் நிதானத்தையும் தன்னை அவர் என்ன நோக்கமாய்த் தண்டிக்கிறாரென்பதையும் அறிந்து உணர்ந்து தாழ்ந்து அவரை நோக்கி மன்றாடுவான். அப்போது அவர் அவனுக்கு இரங்குவார். நாம் நமது பாவங்களை உணருமுன் தேவன் அவைகளை மன்னிப்பதில்லை. நாம் நமது குறைவை உணருமுன் அவர் நமக்கு நிறைவை அளிப்பதில்லை. அவர் நம்மைத் துன்பப்படுத்தும்போதும், நீதியாய்த்தான் துன்பப்படுத்துகிறார் என்று உணருமுன், அவர் நமக்கு இரக்கஞ்செய்வதில்லை. ஒருவன் தன் பாவத்தை ஒப்புக்கொள்ளுமுன் அவனுக்கு மன்னிப்பளிப்பது தேவனுடைய பரிசுத்தத்திற்குப் பொருந்தாது; ஒருவன் தன் குற்றத்தை ஒப்புக்கொள்ளாமல் பாவ மன்னிப்பைத் தேடுவதும் நியாயத்திற்குப் பொருந்தாது. மனுஷனுடைய இருதயம் கற்போல கடினமாயிருக்கும்போது, தேவனுடைய உள்ளம் ஈயம்போல் இள

காது. ஆதலால் பாவம் நிறைந்த ஏழை ஆத்துமாவே, நீ மனம் இளகிக் கண்ணீர் சிந்தி மகத்துவ தேவன்முன் முழங்காலூன்றி, நீ பாவியென்றும் அவர் நீதிபரரென்றும் அறிக்கைபண்ணி, அவரை நோக்கி மன்றாடு. அப்போது அவர் உனக்கு இரங்குவார்.

தேவன் மனுஷனுக்கு இரங்குவது தமது குமாரன் மூலமாய்த்தான் என்பதும் வாக்கியத்தில் தெளிவாய் விளங்குகிறது. "அதனுன்னவர் அவனுக்கு அநுசாரியாயிருந்தாரேயாகில் அவர் அவனுக்கு இரங்குவார்." நாம் கிறிஸ்துவையும் கிறிஸ்து நம்மையும் அண்டும்போது தேவனுக்கு நம்மேல் அதிகமான இரக்கமும் கிருபையும் உண்டாகிறது. கிறிஸ்துவின் பாடாகிய பொன் பாத்திரமே அல்லாமல் நாம் கிருபையை ருசிக்கக்கூடிய இடம் பிறிதொன்றுமில்லை. தேவன் தமது பூரண கிருபையைப் பெருமிதமாய் வார்த்துவைத்திருக்கும் சொர்ண வட்டில் அவருடைய திருக்குமாரனுடைய பாவநிவாரணப்பலியே. பாவி, நீ அதைப் பானம்பண்ணு; பானம்பண்ணுவதென்றால் என்ன? அதை நம்புவதுதான். அவர் உனக்காகச் செலுத்தின திவ்ய பலியை நம்பித் தேவனிடத்திலே போ. போனால் அவர் தமது குமாரன்மூலமாய் உன்னை ஏற்று இரட்சிப்பார். இவ்வாறு நித்திய பிதாவானவர் தமது சத்திய சுதனைப் பாவியினிடத்திற்கு அனுப்பித், தமது நிதானத்தை அவனுக்குத் தெரிவித்துத், தமது சுதன் மூலமாய் அவனுக்குக் கிருபைசெய்வது, அவர் அவன்மேல் இரக்கமுள்ளவர் என்பதற்கு அடையாளமாயிருக்கிறது.

**IV.** இரங்குவது மாத்திரமல்ல, **அவர் அவனை விடுவிக்கிறார். பிரசங்க** வாக்கியத்தில் "அவன் படுகுழியில் இறங்காதபடிக்கு நீர் அவனை இரட்சியும்" என்று வாசிக்கிறோம். படுகுழி என்பதின் கருத்தென்ன? அது பிரேதக்குழியைக் குறிக்குமா? எலிகூ என்பவன் பிரேதக்குழியைக் குறித்துத்தான் சொல்லுகிறான். ஆனால் ஆவியானவருடைய கருத்து பிரேதக்குழியல்ல. துன்மார்க்கன் பிரேதக்குழிக்குள் மாத்திரமல்ல அதைவிட பயங்கரமான ஒரு படுகுழியில் இறங்குகிறான். அந்தக் குழிக்குப் பெயரென்ன? ஓ, நரகம். நரகம் என்கிற வார்த்தையைக் கேட்கும்போது உன் மனம் பதறவில்லையா? உன் எலும்பு அதிரவில்லையா? உன் மாம்சம் துடிக்கவில்லையா? உன் முடி சிலிர்க்கவில்லையா? இரக்கமாய் உன்னை இரட்சிக்க வருகிற இயேசுவை நீ நம்பாவிட்டால், அந்தகாரமும் அலறுதலும் நிறைந்த, சஞ்சலமும் தவிப்பும் நிறைந்த, கதறுதலும் கண்ணீரும் நிறைந்த அந்தப் பாதாளத்திலே அதோகதியாய் விழுவாய். ஆ, சிநேகிதனே தேவனுடைய இரக்கத்தின் சத்தம் பயங்கரமான அந்தப்



படுகுழியினின்று, "அவனை இரட்சியும் இரட்சியும்" என்று தொனிக்கிறது. இது எவ்வளவோ அமிர்தமான தொனி; அது வெறும் எச்சரிப்பின் தொனியல்ல; அரசருடைய தொனியைவிட அதிகாரம் பொருந்தினது; பாதாளத்தையும் அதின் அதிபதியையும் அதிரப்பண்ணத்தக்கது. அது இரக்கத் தொனி; இன்பத் தொனி; வல்லமையுள்ள தொனி; மகத்துவம் பொருந்தின தொனி. ஆதலால் நீ பயப்படாமல் கிறிஸ்துவைப் பற்றிப் பிடி; அவர் அந்தப் படுகுழியினின்று உன்னை விடுவிப்பார்.

**V. கடைசியாய் தேவன் பாவியை விடுவிப்பதற்குச் சொல்லப்பட்டிருக்கிற காரணத்தையும் கவனிக்கவேண்டும்.** "அவன் படுகுழியில் இறங்காதபடிக்கு நீர் அவனை இரட்சியும்; மீட்கும் பொருளை நான் கண்டுபிடித்தேன்." நமது பிணையாளியாகிய புண்ணியநாதர் நமக்காக மீட்கும்பொருளைச் செலுத்தியிருக்கிறபடியால், நமக்கு விடுதலை உண்டு. நாம் அடையவேண்டிய தண்டனையை அவரே அடைந்து உத்தரித்தார். அவருடைய இரத்தம் நம்மை மீட்கும் பொருளாயிற்று. நீதியானது இனி நம்மேல் கோபங்கொள்ளவும் நம்மைப் பயப்படுத்தவும் நியாயமில்லை. ஏனென்றால் கிறிஸ்து அதற்குப் பூரண திருப்தி உண்டுபண்ணியிருக்கிறார். உனக்காகப் பாடுபட்டவருடைய உன்னத நாமத்தை ஸ்தோத்திரி; அவர் செலுத்தியிருக்கிற மீட்பின் கிரயத்தை மதித்து நன்மையடை. தேவ இரக்கமானது பாவத்தினின்றும் நித்திய படுகுழியினின்றும் உன்னை இரட்சித்திருக்கிறதானால் நீ சந்தோஷித்து மகிழ்ந்து களிகூரு; இன்னும் இரக்ஷிக்கவில்லையானால் மீட்பின் கிரயத்தை விசுவாசித்துப் பாவ மன்னிப்பையும் பரம வாழ்வையும் பெறு. தேவன் உன்னை ஆசீர்வதிப்பாராக.

---

## JACOB BLESSING JOSEPH'S CHILDREN.

## யாக்கோபு யோசேப்பின் புத்திரரை ஆசீர்வதித்தல்.

மிகவும் சிறப்பும் சிங்காரமும் பொருந்தின நந்தவனத்தில் அழகிய பல புஷ்பங்கள் சோபித்து நிற்பதுபோல, வேதாகமத்திலே அறமும் திறமும் பொருந்தின அநேக பக்திசாலிகளின் சரித்திரம் ஜொலித்துக்கொண்டிருக்கிறது. அவற்றில் ஒன்று யோசேப்பென்னும் புருஷ சிரேஷ்டனின் சரிதை. மணியில் ஒளியும் மலரில் மணமும் தேனில் இனிமையும் செறிந்திருப்பதுபோல, யோசேப்பின் ஜீவியத்தில் உயர்வும்

உணர்வுமான பல போதனைகள் நிறைந்திருக்கின்றன. அவற்றில் சிலவற்றைக் கூறுவோம்.

சிறு பிராயத்தில்தானே அவன் சிறந்த குணசாலியாயிருந்தபடியால், தன் தந்தையின் விசேஷித்த தயவைச் சம்



பாதித்துக்கொண்டான். ஆதலால் அவன் தந்தை அவனை மற்ற மைந்தரைவிட அதிகமாய்ச் சிநேகிப்பதற்கு ஏதுவுண்டாயிற்று. தேவனுக்கும் அவன் பிரியமுள்ளவனாய் நடந்துகொண்டதினால் தேவனும், அவனை சிநேகித்துத் தாம் அவ

னுக்குப் பின் செய்யப்போகும் நன்மையை முன்கூட்டிச் சொப்பனத்தின்மூலமாய்த் தெரிவித்தார். யோசேப்பின் சகோதரர் அவனுக்கு விரோதமாய்ப் பொருமையினால் எரிந்து பொங்கிக்கொண்டிருந்தபோதிலும், அவன் அதை ஒரு பொருட்டாக எண்ணாமல், தன் தந்தையின் வாக்கின்படி ஆரண்ணியத்தில் ஆடு மேய்த்துக்கொண்டிருந்த அவர்களை விசாரிக்கும்படி சந்தோஷமாய்ப் போனான். இவ்வாறு தீமைக்குத் தீமை இயற்றாமல் நன்மை இயற்றுவதே நன்றென்பதை அவன் நமக்குக் காண்பித்துத் தந்திருக்கிறான். போத்திப்பார் வீட்டிலும் பூரணசற்குணனாய் ஒழுகிவந்தமையால், அவன் அம்மந்திரியின் மதிப்பையும் நம்பிக்கையையும் அடைந்துகொண்டான். நாம் நற்குண நற்செய்கைகளுடையவர்களாய் நடந்துகொள்வோமானால், நமது எசமான்மார் நம்மை நம்பிக் கண்ணியப்படுத்துவார்கள் என்பதற்கு ஐயமில்லை. நல்லொழுக்கமில்லாதவர்களை அவர்கள் எசமான்மார் சமுசயிப்பதும் கோபிப்பதும் புதுமையல்ல. யோசேப்பு கற்புநெறியில் ஒப்புவமையற்ற உத்தமன் என்பதை யாவரும் ஒத்துக்கொள்ளுவோம். துற்குணசாகரியான அந்தத் துரோகி அவனை அவமார்க்கத்திற்கழைத்தபோது, அவன் "தேவனுக்கு விரோதமாய்ப் பாவம் செய்வது எப்படி" என்று மொழிந்த உறுதிமொழி எப்பேர்ப்பட்டவர்களுக்கும் ஏற்ற பாடமாயிருக்கிறது. அவ்வக்கிரமத்திற்கு இசையாவிட்டால் அவ்வயோக்கிய ஸ்திரீ அவனைப் பகைத்துப் பாடுபடுத்துவாளென்பது அவனுக்குத் தெளிவாய்த் தெரிந்திருந்தும், அவன் அதற்கஞ்சாமல் அறநெறியை விடாமல், அன்பார்ந்த கடவுள் ஆதரவளிப்பார் என்ற அதி உறுதியான நம்பிக்கையோடு அவ்வீனத் தோஷத்திற்கு எதிர்த்து நின்றான். நாம் மாம்ச இச்சைக்கு இசைந்தாவது மனுஷ கோபத்துக்குப் பயந்தாவது பாவஞ்செய்யச் சோதிக்கப்படும்போது, யோசேப்பின் நன்மாதிரியை ஞாபகம்பண்ணிக்கொள்ளுதல் நலமாயிருக்கும். சகல இடங்களிலும் போல, தயை தாக்ஷணியமற்ற சிறைச்சாலையிலும் அவனுக்குத் தயவு கிடைத்தது. அற்புத கடவுள் அநேக ஆபத்துகள் மூலமாய் அவனை அதியுன்னத பதவிக்கு ஏற்றினார். அவன் எகிப்திலே மதிமந்திரியாய் இராஜ்ஜிய பரிபாலனம் பண்ணும்போது, அவனிடத்தில் வந்த அவன் சகோதரரை அவன் நடத்தினவிதம், அவன் அகன்ற அநுபவசாலி என்பதற்கும், பெரிய ஞானகரன் என்பதற்கும், அன்பின் இருப்பிடம் என்பதற்கும், மன்னிக்கும் சுபாவத்தில் மகான் என்பதற்கும் திருஷ்டாந்தமாயிருக்கிறது. அவன் தன் சகோதரரை அவ்வளவு உபத்திரவியாமல் திடீரென்று தன்னைத் தெரிவிப்பானானால், அவர்கள் தங்கள் குரூரங்களை

உணரவும் தங்களுக்குச் சட்டென்று கிடைக்கப்போகும் நன்மையை உணரவும் ஏதுவிராது. ஆதலால் நாம் ஞானத்தோடு நன்மைசெய்யவும், நமது குடும்பத்தாருடைய வருத்தங்களை நிவிர்த்திக்கவும், குற்றங்களை மன்னிக்கவும் இதிலிருந்து கற்றுக்கொள்ளுகிறோம். யோசேப்பு தன் எலும்புகளை எகிப்திலிருந்து கானான் தேசத்திற்குக் கொண்டுபோகவேண்டுமென்று கேட்டுக்கொண்ட விஷயமானது அவன் நல்ல விசுவாசி என்பதையும் வாக்குத்தத்தத்தின் தேசத்தில் பற்றுதலுள்ளவன் என்பதையும் காண்பிக்கிறது. நாம் யாவரும் யோசேப்பைப்போல் விசுவாசமும், கற்பும், மன்னிக்கும் சுபாவமும், நன்மையும், ஞானமும் நிறைந்தவர்களாயிருக்கும்படி பரிசுத்த ஆவியின் உதவியினால் பிரயாசப்படுவோமாக.

RESULTS OF HINDUISM.

## இந்துமார்க்கத்தின் பலன்.

விருக்ஷத்தைப் பழத்தினாலும் பசுவைப் பாலினாலும் மனுஷனைக் கிரியையினாலும் அறியக்கூடியதுபோல, ஒரு மார்க்கத்தை அதின் பலனால் அறியலாம். ஆதலால் இத்தேசத்தில் பெரும்பான்மையோர் ஆசரித்துவருகிற இந்துமார்க்கத்தின் பலன்கள் எவைகளென்றும், அம்மார்க்கம் இந்தியாவை ஈடேற்ற ஏற்றதுதானோ என்றும், புத்திசாலிகள் யாவரும் நிர்ப்பட்சபாதமாய் ஆலோசித்துத் தீர்மானிக்கவேண்டியதாயிருக்கிறது. அதற்குதவியாகப் பின்வரும் குறிப்புகளைச் சொல்லுகிறோம்.

I. **சுகவீனமும் ஆயுசுகுறைவும்.** இந்துமார்க்கம் அருமையான அநேக உயிர்கள் சரீர பலட்சயமும் அகாலமரணமுமடைய ஏதுபண்ணுகிறது. அதற்குத் திருஷ்டாந்தம்: (1) பெந்துக்களோடே மாத்திரம் விவாகம் பண்ணலாம் என்ற ஏற்பாடு. முதல் வருணத்தாரான பிராமணரும் பல பிரிவுடையவர்களாயிருக்கிறார்கள். முதலிமார் ஏகதேசம் ஐம்பது பிரிவுகளாகவும், நாயிடுமார், பிள்ளைகள், செட்டிகள் முதலிய ஜாதியார் பல பிரிவுகளாகவும் வகுக்கப்பட்டிருக்கிறார்கள். இந்தப் பிரிவார் ஒருவரோடொருவர் விவாகம் பண்ணுகிறதில்லை. ஆதலால் அவர்கள் சிறு தொகையான தங்கள் பெந்துக்களுக்குள் புருஷரையும் மணவிகளையும் தெரிந்துகொள்ளவேண்டியதாயிருக்கிறது. அதினாலே சரீரத்திலும் வயசிலும் மற்றும் விஷயங்களிலும் மிகவும் பேதமான புருஷர் ஸ்திரீகள் விவாகத்தினால் இணைக்கப்பட்டு, அவர்களில் அநேகர் பெல



வீனமும் அகால மரணமும் அடைவதற்கு ஏதுவாயிருக்கிறது. (2) சிசுவிவாகம். இதைப்பற்றி மனுதர்மசாஸ்திரம்: பெண்ணை அவள் புஷ்பவதியாகுமுன் விவாகம் முடித்துக்கொடுக்கவேண்டும்; விவாகத்திற்குமுன் அவள் புஷ்பவதியானால் அவளை மணமுடிக்கிறவன் நரகத்திலே விழுவான்; அவள் தகப்பனும் பாட்டனும் பாட்டன் தகப்பனும் மலத்திலே, புழுக்களாய் ஜனிப்பார்கள் என்று சொல்லுகிறது. பேர்போன சுதேச டாக்டர் ஒருவர்: குழந்தைப்பருவத்தில் மணமுடிப்பதினால் இந்து ஸ்திரீகள் நூற்றில் 25 பேர் அகால மரணமடைகிறார்களென்றும், அந்தக் காரணத்தினாலேயே நூற்றில் 25 பேர் நோயும் பெலவீனமுமுற்று வருந்துகிறார்களென்றும் சொல்லியிருக்கிறார். மேலும் நோய்கொண்ட தாய்மார் நோய்கொண்ட குழந்தைகளை ஜனிப்பதே தவிர, சுகமுள்ள சிசுக்களைப் பெறுதல் அரிது. (3) தகுந்த வயித்தியரும் மருத்துவிச்சிகளும் இல்லாதது. இந்துமார்க்கப்படி வயித்திய வருணத்தார் தாழ்ந்த வகுப்பாராயிருக்கிறார்கள். அவர்களும் தீட்டுக்குப் பயந்து மனுஷ சரீரத்தை அறுத்து அதின் கூறுபாடுகளை அறிகிறதில்லை. நாட்டு மருத்துவிச்சிகளுடைய திராணிக்குறைவினால் அநேக ஸ்திரீகள் பேற்றில் மரித்துப்போகிறார்கள். (4) கொள்ளைநோய்கள் பேய்பிசாசுகளினால் உண்டாகிறதென்கிற எண்ணம். இந்துமார்க்கம் வைசூரி வாந்திபேதி ஆதியான ரோகங்கள் மாரியம்மன் முதலிய தேவதைகளினால் உற்பத்தியாகிறதென்று சொல்லுகிறபடியால், இந்துக்கள் அந்தத் தேவதைகளைச் சாந்தப்படுத்தும்படி பலிகள் செலுத்துகிறதும் இன்னும் பல நிர்ப்பிரயோஜனக் கிரியைகள் செய்வதுமேயல்லாமல், சுத்த விருத்தியையும் ஆகார விருத்தியையும் கவனிக்கிறதில்லை. இது கண்ணோய் திரக்கால் நோய்க்கு மருந்து செய்தாற்போலிருக்கிறது. இங்கிலாந்து தேசத்திலே இப்பேர்ப்பட்ட இதக்கேடுகள் இல்லாதபடியால், அங்கே ஜனங்கள் பெரும்பாலும் நீடிய ஆயுசுடையவர்களாய் வாழ்கிறார்கள்.

II. **தரித்திரம்.** இந்துமார்க்கம் தரித்திரத்தை உண்டுபண்ணுகிறது என்பதற்கு அநேக சாக்ஷிகள் உண்டு. அவற்றில் சிலவற்றைச் சொல்லுகிறோம். (1) அந்நிய தேசங்களோடு வர்த்தகம் பண்ணுதிருப்பது. இந்துமார்க்கம் அந்நிய தேசத்தார் யாவரும் அசுத்தரான மிலேச்சரென்று போதிக்கிறது. அவர்கள் தேசத்தில் இருபிறப்பாளரான ஜாதியார் சிறிது நேரமும் தாமதிக்கக்கூடாது. நமது மார்க்கமே நமக்கு இப்படிப் போதித்தால் நாம் வர்த்தகவளம் பொருந்தி வாழ்வதெப்படி? (2) வேளாண்மையை அவ்ம

திப்பது. மனுதர்ம சாஸ்திரத்திலே பிராமணனாவது சத்திரியனாவது வேளாண்மை செய்யக்கூடாது என்று விதித்திருக்கிறது. ஒரு தேசத்தின் வாழ்வுக்குக் கிருஷி மிகவும் அனுகூலமாயிருக்கிறது. துவிஜர் பயிர் செய்யக்கூடாதென்றால் சூத்திரரும் செய்யலாகாது. (3) கைத்தொழிலை அசட்டைபண்ணுதல். இன்னின்ன ஜாதியார் மாத்திரம் இன்னின்ன தொழிலைச் செய்யலாமென்று இந்துமதம் விதிக்கிறதினாலே, இந்தியாவில் இங்கிலாந்தில்போல கைவேலைகள் விருத்தியாகிறதில்லை. மேலும் தொழில் செய்கிறவர்களை தொழில் செய்யாத ஜாதியார் மிகவும் அற்பமாய் எண்ணுகிறார்கள். இப்படியிருந்தால் தேசம் ஈடேறுவதெப்படி? (4) விவாகத்தைப்பற்றின தப்பான போதனை. இந்துமதப்படி ஒரு மனுஷன் மோக்ஷத்திற்குப் போகவேண்டுமானால், அவனைப் புத் என்ற நரகத்தினின்று இரட்சிப்பதற்குப் புத்திரன் வேண்டும். ஆதலால் அநேகர் மனைவியை ஆதரிப்பதற்குத் திராணியடையுமுன் விவாகம்பண்ணித் தரித்திரத்தையும் கஷ்டத்தையும் கட்டிக்கொள்ளுகிறார்கள். (5) பாத்திரம் அறிந்து பிச்சையிடாமை. யாசிப்பதே தொழிலாகவுடைய அநேக ஜாதியார் இந்தியாவில் இருக்கிறார்கள். அவர்கள் யாவருக்கும் பிச்சை கொடுப்பது புண்ணியமென்று இந்துமார்க்கம் போதிக்கிறது. வேலை செய்து தனவான்களாகக்கூடிய இலக்ஷக்கணக்கான ஜனங்கள் இவ்வாறு பிச்சையெடுத்துப் பிழைக்க உற்சாகமடைகிறபடியால், ஈகிறவர்களுக்கும் ஏற்கிறவர்களுக்கும் குறைவும் வறுமையுமுண்டாகிறது. (6) விதியின் உபதேசம். "விதிவசத்தை மாற்ற ஆராலாகும்" என்பது இந்துக்கள் அவநம்பிக்கையோடு சொல்லுகிற பழமொழியாயிருக்கிறது. ஆதலால் மனுஷர் விதிவசமே நடக்கும் என்று நம்பி முயற்சிபண்ணுதிருக்க ஏதுவுண்டாகிறது. (7) முக்தியின் உபதேசம். ஒவ்வொரு ஆத்துமாவும் 84 இலட்சம் பிறவி பிறக்கவேண்டுமென்றும், அந்தப் பிறவியாகிய நெடுஞ் சங்கிலியை அறுப்பதற்கு நல்லதும் தீயதுமான சர்வ கிரியைகளையும் விட்டுவிடவேண்டுமென்றும் இந்துமார்க்கம் போதிக்கிறது. இவ்வாறு இம்மதமானது மனுஷருடைய முயற்சியைக் குறைத்துத் தரித்திரத்தைப் பெருக்குகிறதென்பதை நீதியும் நியாயமுமுள்ள யாவரும் நிராட்சேபமாய் ஒத்துக்கொள்வார்கள்.

III. **அறிவீனம்.** (1) இந்துமதம் பெரும்பான்மையான ஜனங்களை விசேஷமாய் ஸ்திரீகளைக் கல்வியில் தேறச் சம்மதிக்கிறதில்லை. பிராமணனேயல்லாமல் வேறொருவனும் வேதத்தை வாசிக்கவோ அதைப் பிறர்க்குக் கற்பிக்கவோ கூடாதென்று சாஸ்திரங்கள் கூறு



கின்றன. "சேலைமேல் சேலை கட்டித் தேவரம்பையாடினாலும், ஓலைமேல் எழுத்தாணி, ஊன்றும் பெண் ஆகாது" என்பதும் அநேக இந்துக்களின் கொள்கையாயிருக்கிறது. இந்தக் கொள்கைக்கு அவர்கள் மார்க்க போதனையே காரணம். (2) இந்த நூல்களை வாசிப்பதினால் தப்பெண்ணம் உண்டாகத்தக்கதாயிருக்கிறது. சத்த சமுத்திரமும், சத்த தீவுகளும், அட்டதிக்குக் கஜங்களும், ஆதிசேடனும், 84 ஆயிரம் யோசனை உயரமுள்ள மேரு மலையும், அகஸ்தியர் சமுத்திரத்தைக் குடித்ததும், தக்கனுடைய சாபத்தினால் வளர்பிறை தேய்பிறைகள் உண்டாவதும், ராகு, கேது என்னும் சர்ப்பங்கள் சூரிய சந்திரர்களை விழுங்குவதும், இவைபோன்ற இன்னும் பல விஷயங்களும் இந்துக்கள் பூஜ்யமாய் நம்பிவருகிற பொய்களாயிருக்கின்றன.

IV. **ஜாதிவித்தியாசம்.** இந்துமதம் இவ்விஷயத்தில் இந்துக்களுக்குச் செய்கிற தீமைக்குக் கங்குகரையில்லை. (1) இந்துக்கள் யாவரும் ஏகஜாதியார் என்கிற எண்ணத்தைக் கெடுத்துவிட்டது. ஜனங்கள் பல ஜாதிகளாய்ப் பிரிந்து ஒருவரோடொருவர் யாதொரு சம்பந்தமும் இல்லாதவர்களாய் சுத்த அந்நியரும் பகைவருமாய் இருக்கிறார்கள். (2) தேசத்தை அந்நியருக்கு இரையாக்கிவிட்டது. "பிரித்துவிட்டு ஜெயத்தை அடை" என்பது ரோமருடைய பிரமாணம். இந்தப் பிரமாணத்தின்படி பிராமணரும் மனுஷரைப் பல வகுப்புகளாய்ப் பிரித்து அவர்கள்மேல் அதிகாரஞ் செலுத்திவந்தார்கள். ஆனால் அவர்கள் உண்டுபண்ணின இந்தப் பிரிவானது, "தன்வினை தன்னைக் கொல்லும்" என்றபடி, அந்நிய தேசத்தாராகிய பலர் இந்தியாவை இலகுவிலே ஜெயித்து, பிராமணருடைய அதிகாரத்தையும் குறைத்து அவர்களையும் கீழ்ப்படுத்த ஏதுபண்ணிவிட்டது. இது "அஞ்சனக்காரன் முதுகில் வஞ்சனைக்காரன் ஏறின" கதைபோலிருக்கிறது. (3) சமுதாய சீர்திருத்தத்தைத் தடுக்கிறது. இந்தியா இப்போது அதிகமாய் வருந்துவது எந்தத் தீமைகளினால்? சுய அரசாட்சியில்லாததினாலேயா? இல்லை. பெண்கல்வியை உபேட்சிப்பதினாலும், பிள்ளைக் கலியாணத்தைக் கொண்டாடத்துவதினாலும், விதவைவிவாகத்தை விரோதிப்பதினாலும், பழைய வழக்கமே சரி என்று வாதிப்பதினாலும்தான். இவற்றிற்குக் காரணம் என்ன? ஜாதிவித்தியாசம். ஜாதி வித்தியாசத்திற்குக் காரணமென்ன? இந்துமார்க்கம்.

V. **மனுஷனை அஃறிணைச் சிருஷ்டியாகத் தாழ்த்துதல்.** இந்து மார்க்கம் புனர்ஜனன உபதேசத்தை மகா கண்டிப்பாய்ப் போதிக்கிறது. இப்போது அறிவுள்ள மனுஷனாயிருக்கிறவன் சீக்கிரத்திற்

குள் கத்துகிற கழுதையாய்ப் போவானென்றும், இப்போது உருக்க சிந்தையுள்ளவளாயிருக்கிற ஸ்திரீ சீக்கிரத்திற்குள் பொல்லாத புலியாகிவிடுவாளென்றும், இப்போது ஜாக்கிரதையாயிருக்கிற சிறுவன் சீக்கிரத்தில் சோம்பலான தேவாங்காய்ப் போவானென்றும், இன்னும் இவைபோன்ற பல ஈனப்பிறவிகளாய்ப் பிறப்பானென்றும் போதிக்கிறது. இந்தப் போதனை மனுஷனை உயர்த்தக்கூடியதா, தாழ்த்தக்கூடியதா?

இன்னும் வரும்.

## VOLCANOES.

## அக்கினிமலைகள்.

பெருமிதமான அக்கினியைக் கக்குகிற வாயையுடைய மலையே அக்கினி மலையாம். படத்திலே காண்கிற எரிமலையின் வாய் உயர்ந்த பறைகளினுல் சுற்றப்பட்டிருப்பதால், அது அசாதாரணமானது.

நெருப்புமலைகள் சில அதிக உயரமுள்ளவைகளாயும், சில கடல்மட்டத்திற்கு மாத்திரம் உயர்ந்துமிருக்கும். சமுத்திரத்திலும் சில எரிமலைகளுண்டு. எற்ன வெசூவியஸ் என்னும் பேர்போன அக்கினிப் பர்வதங்கள் சமுத்திரத்தில் உற்பத்தியாயின. சில மலைகள் ஜாக்கிரதையாய் அக்கினியைக் கக்கிக்கொண்டிருந்தபோதிலும், சிலது அவ்வளவு அதிகமாய்க் கிரியைசெய்கிறதில்லை. வெசூவியஸ் மலையைப் போன்ற சிலது சிறிதுகாலம் சும்மாயிருந்து, சிறிது காலம் ஓயாமல் நெருப்பை வெளிப்படுத்திக்கொண்டிருக்கும். அப்பேர்ப்பட்ட மலைகள் அக்கினியை ஆற்று நீர்போல் கக்கிக்கொண்டிருப்பதால், சமீபத்திலுள்ள பட்டணங்கள் சர்வநாசமாகின்றன. ஓயாமல் கிரியை செய்துகொண்டிருக்கிற எரிமலைகள் உலகத்தின் சில பாகத்தில் மாத்திரம் உண்டு. அவைகளில் ஒரு மலைத் தொடர் பசிப்பிக் சமுத்திரக் கரையில் இருக்கிறது. எரிமலைகளைப் பற்றிய ஒரு விசேஷம் என்னவென்றல்: அவைகள் சமுத்திரத்தை அடுத்து இருப்பதுதான். 323 எரிமலைகளில், மத்திய ஆசியாவிலும் அமெரிக்காவிலுமுள்ள இரண்டுமூன்று தவிர, மற்றவைகள் எல்லாம் கடற்கரையில் இருக்கின்றன. சண்டா என்னும் கால்வாயில் இருக்கிற ஒரு தீவில் கிரக்கதோவா என்னும் பேருள்ள விசேஷித்த ஓர் எரிமலை இருந்தது. அந்தத் தீவு 5 மைல் நீளமும் 3 மைல் விதியுமுள்ளது. அதிலிருந்த மேற்படி மலை 2750 அடி உயரமுடையது. 1680-ம் ஹு



அதில் ஒரு அக்கினி வாய் உண்டாகி பெருமிதமான நெருப்பு வெளிப்பட்டது. அதற்குப் பின் நெடுங்காலமாக நெருப்புக் காணப்படவில்லை. ஆனல் 1883-ம் ஹு அது திரும்பவும் வெடித்து, அக்கினி கக்கி, அவ்வாண்டு ஆகஸ்ற் மீ 27-ம் உ சற்றேறக்குறைய அத்தீவு முழுவதையும் சர்வநாசம் பண்ணினது. அதுந்தவிர, அவ்வக்கினி அதைச் சுற்றிலுமிருந்த



தீவுகளிலும் பரந்து சற்றேறக்குறைய 36 ஆயிரம் ஜனங்களையும் 300 கிராமங்களையும் பட்சித்துவிட்டது. இந்த அக்கினிக் கொதிப்புக்கு முன்னமே ஆழமான ஜலமிருந்த இடத்தில் இரண்டு புதிய தீவுகள் உற்பத்தியாயின. மேற்படி அக்கினி வெடிப்பின் சத்தம் 3000 மைல் தூரம் கேட்டது. இந்த எரிமலைக் கொதிப்பின் காரணத்தினலேதான்

1883-ம் ௵ கன்னியாகுமரியில் சமுத்திரம் அரை மைல் தூரம் உள்வாங்கி இரண்டொரு தினத்திற்குப் பின் தன் சரியான இடத்திற்கு வந்தது.

எரிமலைக் கொதிப்பு உண்டாகும் காரணம் என்னவென்று அறியவேண்டியது. அதற்குக் காரணம் பூமிக்குள்ளமைந்திருக்கிற சூடுதான். சில இடங்களில் பூமிக்குள் ஏராளமான வெப்ப வாயு ஒன்றாய்ச் சேர்ந்து வெளிப்படப் பிரயத்தனிக்கும் போது, பூமி அதைத் தாங்கிக்கொள்ளமாட்டாமல், வெடித்து விடுகிறபடியால், அந்த வெப்ப வாயு மகா பயங்கரமான சக்தியோடு வெளிப்பட்டுப் பெருஞ் சேதம் செய்கிறது.

## THE DECEPTION OF KRISHNA.

## கிருஷ்ணனின் கிருத்திரமம்.

### (பாரதம் 15-ம் போர்ச் சருக்கம்.)

வல்லவ ரனந்த கோடி மறைகளின்படியே யாய்ந்த
சொல்லிய அறங்கள் யாவும் நின்னிடை தொக்கவாற்றல்
புல்லிய பொய்யொன்றென்னும் பொருபெரு நெருப்புக்கீரம்
இல்லை மற்றென் றுமெண்ணு தியம்புக இதனை யென்றான்.

பாண்டவரும் கௌரவரும் குருச்சேத்திரத்தில் போர் செய்யும் போது, கிருஷ்ணன் பாண்டவர் பக்கத்தில் சேர்ந்து அர்ச்சுனனுக்கு இரதசாரதியாயிருந்து, தீமையான விதமாகவும் பாண்டவருக்குப் பல உதவிகள் புரிந்தான். அவற்றில் ஒன்றை இங்கே சொல்லுகிறோம்:—

கௌரவர் பக்கத்தில் யுத்தஞ்செய்த துரோணாச்சாரிக்கு அஸ்வத்தமா என்பவன் புத்திரனாயிருந்தான். அந்தத் துரோணச்சாரி: என் மைந்தன் அஸ்வத்தமா மரித்தான் என்று தருமருடைய வாக்கினால் கேட்பேனாகில், புத்திரசோபத்தால் உயிர் விடுவேன் என்று சொல்லியிருந்தான். மேற்படி யுத்தத்தில் அஸ்வத்தமா என்ற பேர்கொண்ட ஒரு யானை இறந்துபோனது. இதைக் கவனித்த கிருஷ்ணன் தந்திரமாய்த் தருமரை நோக்கி: ஓ, முரச கேதன மூர்த்தண்யனே, நமது அர்ச்சுனனும் நானும் மாளவத் தலைவன்மேல் சென்று அவ்வரசன் ஏறிய அஸ்வத்தமா என்னும் பெயரினையுடைய பட்டத்து யானையை வெட்டிக் கொன்றிருக்கிறோம். ஆதலால் அதனைச் சொல்லி ஜெயங்கூறவேண்டும் என்றுரைக்கத், தருமர்: நான் அந்த யானையின் பெயரை எடுத்துக்கூற வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை என்று மறுத்துவிட்டார். அப்



போது கிருஷ்ணன்: துரோணாச்சாரி தருமர் வாக்கினால் என் மகன் இறந்தானென்று சொல்லக் கேட்பானாகில் பிள்ளை விசாரத்தால் பிராணனை விடுவேன் என்று சொல்லியிருப்பதால், நீர் பொய்பேசவேண்டியதில்லை; இந்தப் போரில் அவன் பிள்ளை பெயர்கொண்ட யானை இறந்ததென்று விளம்புவீராகில், அது அவன் செவியில் விழுந்தவுடன் அவன் ஜீவனை விடுவான் என்று சொல்ல, மெய்யையுடைய வேந்தன் அரி அரி என்று இருசெவியும் மூடி: இப்போது நான் பொய் சொல்லி வாரிக்கொள்வது இந்தப் பூமியாகிய மண்ணே என்று சொல்லி நகைத்து அப்படிப் பொய் மொழியேன் என்று புகன்றுவிட்டார். இதைக் கேட்ட கிருஷ்ணன்: ஓ வேலாயுதம் தாங்கிய வேந்தனே இவ்வெள்ளைப்புத்தி உம்மைவிட்டு விலகுவதெப்போது? நீர் மெத்த சாஸ்திரமாயிருந்தால் எப்படி போர் முடியும்? எப்படி சபதம் நிறைவேறும்? இதன்றியும் உம்மை நான் இப்போது சொல்லச்சொல்வது பாவமாகமாட்டாது. வல்லவராகிய மகானுக்குள் அநேகங்கோடி வேதங்களை ஆய்ந்து தேர்ந்து சொல்லியிருக்கிற வெகுவாகிய சாஸ்திர தருமங்களெல்லாம் உமதுள்ளத்தில் சேர்ந்திருக்கிறபடியால் ஒரு பொய் சொன்னால் என்ன முழுகிப்போச்சுது. பெரு நெருப்புக்கு ஈரமுண்டோ? இது நல்ல சமயம்; விரைவில் சென்று சொல்லும் என்க, தருமராஜன்: அசுவத்தமாவென்னும் யானை இறந்ததென்பதாய்ச் சொல்லுகிறேன் என்று சொல்ல, கிருஷ்ணன் கலகலவென்று நகைத்துக்கொண்டு: நீர் சொல்லுகிற வாக்கியம் சொல்லழகாயிருக்கவில்லை, அது துரோணருக்குக் கர்ணகரோமாயிருக்கும் என்று மொழிய, பின்னை எப்படிச் சொல்வதென்று தருமர் கேட்டார். அப்போது கிருஷ்ணன்: “அஸ்வத்தமா அதா குஞ்சரா” (அதாகுஞ்சரா என்பது யானை அதமானது என்று பொருள் படும்) என்று சொல்லுவீராகில் துரோணனும் கோபங்கொள்ளான்; சத்தியமும் குறைவுபடாது; நமது எண்ணமும் திண்ணமாகும் என்று பகர, தருமர் அதற்கிசைந்து அஸ்வத்தமா அதா குஞ்சரா என்று சொல்லத் துவக்கி, அஸ்வத்தமா அதா என்று சொன்னவுடன், குஞ்சரா என்ற வார்த்தை வெளியே கேளாதபடி கிருஷ்ணன் தன் சங்கை எடுத்துப் பம்பம்மென்று பூரித்துப் பெருந்தொனி செய்தான். அப்போது துரோணச்சாரி அஸ்வத்தமா அதா என்ற வார்த்தைகளை மட்டும் கேட்டுத் தன் மைந்தன் இறந்தானென்றெண்ணி, வில் முதலாகிய பேராயுதங்களைப் போட்டுவிட்டு, யுத்தக்களத்திலே தேரின்மேலேயே யோகநிலை பூண்டிருந்தான். அப்போது திஷ்டத்துய்மன் என்னும் பாஞ்சால ராஜன் புத்திரன் முன் சபதப்படி அவனை எய்து கொன்றான்.

## SUMMARY OF NEWS.

## சமாசாரத்திரட்டு.

ஸார் என்னும் ருஷிய அரசனும் ஆமீர் என்னும் அப்கானிஸ்த அரசனும் கொடிய சுகவீனத்தினுல் வருந்துகிறுர்கள். ஸார் அரசன பிழைப்பாரென்ற நம்பிக்கை இல்லை. ஆமீர் வேந்தனும் அதிமோசமான வியாதியிலிருந்தும், இப்போது சற்று சுகமடைந்துவருவதாகக் காண்கிறது. ஸார் அரசன் சமாதான புருஷனுதலால், அவர் மரணம் ஐரோப்பாவுக்குப் பெரிய நஷ்டமாய் முடியும். ஆமீருக்குப்பின் அரசாட்சி செய்பவர் யார் என்பது தீர்மானிக்கப்படாதபடியால், ஆமீர் அசௌக்கியமாயிருந்தபோது, அநேகருக்குள் அதிகமான கவலை வியாபித்தது. கொறியாவிலே யுத்தம் இன்னும் நடந்துகொண்டுதான் இருக்கிறது; யாப்பானியர் சீனரைப் பலதரம் ஜெயித்துத் துரத்தினுர்கள். பிரித்தானிய ராஜாங்கத்தார் அவர்களைச் சமாதானப்படுத்தப் பிரயாசப்பட்டும், வாய்க்கவில்லை. மதகாஸ்கார் ஜனங்களைக் கீழ்ப்படுத்தும்படி பிரான்ஸ் ராஜாங்கத்தார் சேனை அனுப்புகிறுர்கள். தென் ஆப்பிரிக்காவிலுள்ள காப்பிரிகள் அங்கிருக்கிற போட்டுக்கல் தேசத்தாருக்கு விரோதமாய் எழும்பியிருக்கிறுர்கள். கிளாட்ஸ்றன் மந்திரியுடைய கண் நன்முகிவருவதும் தவிர, அவர் நல்ல சரீர சௌக்கியமுடையவராயும் இருக்கிறுர். சென்னைக் கவர்ணர் வடபாகத்தில் சுற்றி யாத்திரை செய்து, சென்ற மாசம் 31-ம் உ சென்னைக்குத் திரும்பினுர். இந்தியாவிலே 400-க்கு அதிகமான வர்த்தமானப் பத்திரிகைகள் இருக்கின்றன. சென்ற வருஷம் இந்தியாவிலிருந்து 18,000 மகமதியர் மெக்கத்துக்குப் புண்ணிய யாத்திரை போயிருக்கிறுர்கள். அநேக வருஷமாய் இவ்வளவு பெருந்தொகையானவர்கள் இங்கிருந்து மெக்கத்துக்குப் போனதில்லை.

---

இது நாகர்கோவில் லண்டன் மிஷன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

